24-5

# தத்துவ ராய ஸ்வாமிகள் செய்த,

1. அருட் டிருப் பள்ளி எழுச்சி.
2. சிவப் பிரகாச சுவாமிகள் திருப் பள்ளி எழுச்சி.
3. ஸ்வரூபாநந்த சுவாமிகள் திருப் பள்ளி எழுச்சி.
4. தத்துவப் பிரகாச நாயனுர் திருப் பள்ளி எழுச்சி.
5. பரிபூர்ணப் பிரகாச நாயனுர் திருப் பள்ளி எழுச்சி.

1. ஸ்வரூபாநந்த சுவாமிகள் முதல் திரு எம் பாவை.
2. ஸ்வரூபாநந்த சுவாமிகள் இரண்டாந் திரு எம் பாவை.

**மாணிக்க வாசக ஸ்வாமிகள் செய்த,**

## திரு எம் பாவை - திருப் பள்ளி எழுச்சி.

## ஆண்டாள் அருளிச் செய்த,

## திருப் பாவை.

**தொண்டர் அடிப் பொடியாழ்வார் செய்த,**

## திருப் பள்ளி எழுச்சி.

ஆக சைவ - வைஷ்ணவ - வேதாந்தங்கள்.



திருப் பூ வணம், வேதாந்த மடம்,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

அன்பு அளிப்பு.

**இத் திருப் பள்ளி எழுச்சி -**

**திரு எம் பாவைகள்,**

திருக் களர்

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிக ளவர்கட்கு

மிக விருப்புடையன வாகலின்,

அவர்கள் திரு வடி நினைவின் பொருட்டு

வெளியிட்டு,

அவர்கள் பாத தாமரைக்கே

அர்ப்பணம் செய்யப்பட்டன.

கா. சுவாமிகள்.

हरे राम हरे राम राम राम हरे हरे

ब्रह्म सत्यं जगन्मिथ्या



इति वेदांत डिण्डिमः ॥

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்.

हरे कृष्ण हरे कृष्ण कृष्ण कृष्ण हरे हरे



ஸ்ரீ தத்துவராய ஸ்வாமிகள்.

ஓம் தத் சத்

பரப் பிரஹ்மணே நம:

எறும்பூர் (இறும் பூதூர்)

ஸ்ரீ தத்வ ராய சுவாமிக ளவர்கள் இயற்றிய

# திருப் பள்ளி எழுச்சி.

# திரு எம் பாவை.

अहं ब्रह्मास्मि

अयमात्मा ब्रह्म



प्रज्ञानं ब्रह्म

तत्वमसि

இவை,

திருப் பூ வணம், வேதாந்த மடம்,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகளால்,

மதுரை,

ராஜேஸ்வரி பிரஸில் பதிப்பிக்கப் பெற்றன.

காசிகாநந்த நிலைய அன் பளிப்பு.

விஜய ஆண்டு] 1953. [கார்த்திகை மதி.

சிவ மயம்.

# அணிந் துரை.

---

உலக மாந்தர்கள் நன்மை யடையும் பொருட்டு, மகான்கள் மாந்தர்களின் அறிவை அநுசரித்துச் சரியை கிரியை யோகம் ஞானம் என்றும், கருமம் பக்தி ஞானம் என்றும் பல மார்க்கங்களை இயற்றினுர்கள். அவை யாவும் அதிகாரி பேதத்தால் உபயோகம் உடையனவே ஆகும்.

அவற்றுள், சிவ பக்தியினைப் புகட்ட, மாணிக்க வாசக சுவாமிகள், திருப் பள்ளி எழுச்சி, திரு எம்பாவை என்றும், விஷ்ணு பக்தியினைப் புகட்ட, ஆண்டாள் திருப் பாவை என்றும், தொண்டரடிப் பொடி யாழ்வார், திருப் பள்ளி எழுச்சி என்றும், குரு பக்தியினைப் புகட்ட, எறும்பூரில் (300) முந் நூறு வருஷங்கட்கு முன் சமாதி யுற் றிலங்கும் தத்துவ ராய சுவாமிகள் என்னும் மகான், திருப் பள்ளி எழுச்சி என்றும், திரு எம் பாவை என்றும் செய்திருக்கின்றுர்கள். அம் மூன்றனுள், தத்துவ ராய சுவாமிகள் இயற்றியவை; அருட் டிருப் பள்ளி எழுச்சி (கவி 10). 2. சிவப் பிரகாச சுவாமிகள் திருப் பள்ளி எழுச்சி (கவி 11.) 3. ஸ்வரூபாநந்த சுவாமிகள் திருப் பள்ளி எழுச்சி (கவி 10.) 4. தத்துவப் பிரகாச நாயனுர் திருப் பள்ளி எழுச்சி (கவி 10.) 5. பரிபூரணப் பிரகாச நாயனுர் திருப் பள்ளி எழுச்சி (கவி 10.) எனப் பெயர் பெற்று, 51 கவியில், ஐந்து திருப் பள்ளி எழுச்சி யாகவும், ஸ்வரூபாநந்த சுவாமிகள் முதல் திரு எம் பாவை (கவி 20.) ஸ்வரூபாநந்த சுவாமிகள் இரண்டாந் திரு எம் பாவை (கவி 21.) எனப் பெயர் பெற்று, 41 கவியில் இரண்டு திரு எம் பாவை யாகவும் விளங்குகின் றன. இத் தகைய 92 கவிகளும் வேதாந்தக் கருத்துக்களையும், தத்வ மசி மகா வாக்கியப் பொருளையும், செவ்வை யாகப் பசு மரத் தாணி போல் விளக்குகின் றன. பாடு துறை — அடங்கன்



முறை என்னும் இரண்டனுள் பாடு துறை என்னும் நூலில் இவை உள்ளன. இவற்றைத் தனி யாக வெளியிடின், பலருக்கும் உபகாரம் ஆகும் எனப் பல பெரியார் கூறினமையின், திருப் பள்ளி எழுச்சி - திரு எம் பாவை என்னும் (கவி 92) ஏழையும் தனி யாக அச்சிட்டு, யாவரும் மோக்ஷம் அடைய வேண்டும் என்னும் கருத்தால், அன் பளிப் பாகக் கொடுக்கின்றேம். "மூர்த்திதலந் தீர்த்தம் முறை யாய்த் தொடங்கினர்க்கு, வார்த்தைசொலச் * சற்குருவும் வாய்க்கும் பாரபரமே" என்று தாயுமானுர் கூறியபடி யாவரும் குரு பக்தி செய்து மோக்ஷம் அடைய வேண்டு மென விரும்புகின்றேம்.

மாணிக்க வாசக சுவாமிகள் இயற்றிய, திரு எம் பாவைச் செய்யுள் 20ம், ஆண்டாள் அருளிச் செய்த, திருப் பாவைச் செய்யுள் 30ம் இத்துடன் இணைத் திருக்கின்றேம். படிப்பவர்கள் சௌகரிய மாகச் சைவ வைஷ்ணவ வேதாந்தங்களின் கருத்தைச் செவ்வனே அறிந் துய்யு மாறு, எல்லாம் வல்ல இறை யுரு வாம் ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகளின் விரைத் தாமரை மல ரடிகளில் வீழ்ந் திறைஞ்சுகின்றேம்.

**காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,**

வேதாந்த மடம், திருப் பூ வணம்.

---

* "சற்குருவும் வாய்க்கும்" என்ற உம்மைப் பொருள் ஆராய்ச்சிக் குரியது.

சிவ மயம்.

# அருட் டிருப் பள்ளி யெழுச்சி.

எண் சீர்க் கழி நெடி லடியால் வந்த - ஆசிரிய விருத்தம்.

---

போற்றிநன் மாமறை யீறமர் பொருளே - புரையற நிறைந்தொளிர் போதநன் மாதே, தோற்றமு மிறுதியு மறநிகழ் கடலே - துணையிணை யிறந்துள நிறைந்தது வெளியே, சீற்றமின் முங்வர்க டிளைத்தெழுந் தேனே - சிவப்பிர காசனைப் பிறிவற நிகழு, மேற்றிய பொருளெனு மெழிறரு நகையே - யிறையவ ளேபள்ளி யெழுந்தரு ளாயே. 1

உதயநற் கிரியினை யணுகினன் பரிதி - யுடுமதி மழுங்கின வும்பர்வந் தடைந்தார், சிதைவினற் புகழரி யயனெடிந் திரனுந் - திசைதொறு நிறைந்தனர் திகழ்தரு மடியா, ரிதயமண் டபத்தினி லெழில்கொளு மறிவா - மெந்தைநற் சிவப்பிர காசனல் லெழில்சேர், சுதையெனுஞ் சுவையே துறவியின் றுணையே - சுடரொளி யேபள்ளி யெழுந்தரு ளாயே. 2

நற்றடங் குவளைகண் மலர்ந்தன குருகு - நலம்பெறச் சிலம்பின நான்மறை முழக்க, முற்றன பல்லிய மொலித்தன வெங்கு - மோங்கின தும்புரு நாரதர் கீதம், பற்றற நினைபவர் பருகிடு மமிர்தே - பரமன தருளெனும் பகருதற் கரிய, நற்றவ மேயென துற்பவக் கடுவே - நாயகி யேபள்ளி யெழுந்தரு ளாயே. 3

ஒளியினுக் கொளியே யுயிருனுக் குயிரே - யுருகிடு முளத்தினி லோவிலா வுணர்வே, யளியினுக் களியே யகிலபூ தங்கட் - கன்னையு மாயத்த ளுகிநின் றருளே, தெளிவினிற் றெளிவே சிவப்பிர காசன் - றிகழ்திரு மேனிய ளாஞ்சிறப் புடைய, களிமயிற் பெடையே காரணப் பொருளே - கனங்குழை யேபள்ளி யெழுந்தரு ளாயே. 4



காலமு மூழியு மாகிநின் றவற்றின் - கருவது வாயவை கழன்றகற் பகமே, சீலமு நோன்புமில் சிறியவென் றனக்குச் - சிவநெறி யருளிய தேசிகத் திருவே, மூலமு மாய்முடி வாய்முடி வில்லா - மூத்தனைப் பெருநல முழுதருண் முகிலாங், கோலநற் குயிலே குருமணிக் குகையே - கோமள மேபள்ளி யெழுந்தரு ளாயே. 5

ஐம்பெரும் பூதமு மவற்றதி பதியா - மைவரு மாயவை யன்றிநின் றருளே, யும்பரு முணர்வரி தாயவொண் ணிதியே - யுலகமு முயிர்களு மாய்விரிந் தாளே, நம்பனற் சிவப்பிர காசன தெழில்சேர் - நாடரும் பரம்பொரு ளாகிய நறவே, யென்பா மெனவெனை யேன்றுகொண் டாளே - யின்னமிர் தேபள்ளி யெழுந்தரு ளாயே. 6

கனவினு மமரர்கண் டறிவருங் கருணைக் - கழலிணை கழிகடை யேன்றனக் கருளி, நனவினின் வினவிவந் தாண்டுகொண் டாளே - நாயகி யேநற வார்குழ லமிர்தே, சொனமறை முடிவுக டுதிசெயும் பொருளே - துரியமு மிறந்துசொற் கழிந்ததத் துவமே, புனமயி லேயிறை யோதினும் பிரியாப் - புண்ணிய மேபள்ளி யெழுந்தரு ளாயே. 7

நல்லடி யாருளக் கருத்தினை முடித்து - நன்னலம் பெருகிட நயந்தநற் குயிலே, செல்லல தறவெனை யாண்டொரு மொழியிற் - றிரித்தெனக் கருளிய தேசிகத் திருவே, யல்லுநற் பகலற வாரிய ளுர்த - மழகுறு மேனியி லணிதிரு வருளா, மெல்லிய லேவிளை யாவிளை வேயென் - வேதக மேபள்ளி யெழுந்தரு ளாயே. 8

பிரமனை முதல்வரு பிபீலிகை யீருப் - பெருகிய யோநிக டோறுமங் குயிராய்த், திரமெனத் திகழ்தரு சீவனு மாகித் - திகழ்ந்தவை கழன்றொளிர் சிவப்பிர காசன், வரமுறத் திகழ்தரு

மேனிய தாகி - மன்னரு ளேமயற் பிணிக்குநன் மருந்தே, பரமென விருளுறு மநவெனை யாண்ட - பனிமொழி யேபள்ளி யெழுந்தரு ளாயே. 9

அம்பொருட் சுருதியின் சிரத்தினி லாடி - யழகுறு மன்பர்த மூளத்தின்வீற் றிருந்த, செம்பொருட் சிவப்பிர காசன தெழில்சேர் - திருவரு ளாகிய தெய்வநல் லணியே, வம்பினிற் றிரிதரு மதியிலி நாயேன் - மநவிடாய் கெடவலிந் தாண்டுகொண் டாளே, யும்பருக் குணர்வரி யாயெமக் கெளியா - யொண்ணுத லேபள்ளி யெழுந்தரு ளாயே. 10

அருட் டிருப் பள்ளி யெழச்சி முற்றிற்று.

---

## சிவப் பிரகாச ஸ்வாமிகள் திருப் பள்ளி யெழுச்சி.

---

செயசெய வாழிநற் றேவர்க டேவே - சிவப்பிர காசவென் சிந்தையுட் டெளிவே, யயலுற வறவரு ளாரு ளதுகண் - டாதர வோடுநின் னடியிணை பணிவோ, மயர்வுட னறிவெனு மவைகழன் றெங்கு - மாசற வேநிறைந் தருளிய வமலா, கயவரின் முதலுறு கழிகடை யெனையாள் கருணைய னேபள்ளி யெழுந்தரு ளாயே. 1

வெருளற விவேகன்வந் தெழுந்தனன் மாய - விருளது கழிந்தது மாமறை யீறுந், தெருளுறு வலம்புரி சிலம்பின வெங்குஞ் - சிலம்பின சிவனரு ளாகம மெல்லா, மருளறு சமதம மாதிக ளெல்லா - மலர்ந்தன வறுபகை யழிந்தன ஞானப், பொருளுறு கழல்களென் புன்றலை தருவாய் - பூரண னேபள்ளி யெழுந்தரு ளாயே. 2



கூவின மாமறை யீறுகள் கீதங் - குழறின வாகமங் குலவியு மறியாப், பூவினி னயன்மா லரனொடிந் திரனும் - புகலரி தென்றயர் வுறவெனை யாண்டு, போவதும் வருவது மறவுணர் வாக்கிப் - புகலரும் பாவனை புரையற முழுத்தி, யாவையுங் கழன்றகண் ணுக்கிய வரசே - யிருஞ்சிவ மேபள்ளி யெழுந்தரு ளாயே. 3

இந்திரன் முதல்வரு மிமையவ ரொருபா - லிரவியு மதியுமா மேவல ரொருபான், முந்திய தேவர்கண் மூவர்க ளொருபான் - முனிவர்க டுதிசெயு முழக்கங்க ளொருபால், புந்தியி லுனைநினைந் துருகியுள் ளழிந்து - புராணநன் மலர்கொடு தொழவந்து நிறைந்தார், வந்தெனக் கருள்செய்த மலரடி யரனே - வானவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 4

ஐயுந்து மாகட லாக்கையி னுள்ளே - யடற்புல ஞனரிப் புண்டறி வின்றி, மையுந்து மாமா ணப்பிறப் பின்வாய் - வருந்துகின் றேனைவந் தஞ்சலென் றருளிப், பொய்யுந்து மூனைப்பி ரித்துணர் வாக்கிப் - பொருந்திய சிற்கனங் காட்டிய புநிதா, மெய்யெங்கு மாகவி ழித்தகண் ணளித்த - விரிசுட ரேபள்ளி யெழுந்தரு ளாயே. 5

புழுமிடைந் தசும்புறு புலால்கம ழாக்கை - பொருளென வுழைதரு நோக்கியர் தங்கள், குழுவிடை நினைந்தழிந் துகுதரு வேனைக் - கூவிவந் தாண்டிடுங் குரைகழ லரசே, கெழுமிடை யுலகங்கள் கிளர்தரு திசைகள் - கீழொடு மேல்பக்க முறுமுயி ரெவையும், பழுதற மிகுவிழி யாக்கிய பரனே - பரஞ்சுட ரேபள்ளி யெழுந்தரு ளாயே. 6

அறிவினை வடித்தநற் கிளியது போல - வளவறு சாத்திர மழகுறக் கழறி, யறிவது பிறிதிலை விடயம தொழிய - வறிவறு மவருட னழிதரு வேனைச், செறிதரு திருவடி சென்னியிற்

சேர்த்தித் - திரித்தறி வாக்கியங் கேநிற மழித்துக், குறியற மிகுவழி யாக்கிய கோவே - குருபா னேபள்ளி யெழுந்தரு ளாயே. 7

இரும்பினும் வலிதரு நெஞ்சினை யுருக்கி - யிடம்பெற மகிழ்தரு கோயில தாக்கி, யிரும்பது பருகிய நீரது போல - வென்னுயிர் பருகினை யின்னதென் றறியேன், கரும்பினி லூறலு மமிர்தமுந் தேனுங் - கலந்துறு சுவையெனக் களிதரு கண்ணே, பெரும்பய னேயென துண்ணிறைந் திருந்த - பேரொளி யேபள்ளி யெழுந்தரு ளாயே. 8

ஒன்றெனப் பலவென வுரைதரு பொருளா - யுருவரு வுண்மையு மின்மையு மாகி, நின்றநற் பொருள்களுக் குயிரது மாகி - நிறைந்தொழி வறநின்ற நேர்மையின் வடிவை, யின்றெனக் கெளிவந் திட் டுளங்கையிற் கனியா - யிவனவ னெனவெனை யாண்டவற் புதனே, துன்றிய மறைதொடர் வரியநற் சொரூபா - சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. 9

நாய்வயி னுள்ளதோர் குணமது மில்லா - நலமிலி யாய்நர கினில்விழு வேற்குத், தாயென வாகிவந் திணையடி சூட்டித் - தகவருட் பெருங்கனை யளித்தவென் றலைவா, பாவியே னீசெய்த பரிசது நினையேன் - பதைத்துரு கேன்கண்ணீர் சொரியவுங் காணே, ணுவியுஞ் சோரே னலறிநின் றழியே - னருட்கட லேபள்ளி யெழுந்தரு ளாயே. 10

நாயினுங் கடையாய்க் கிடந்தவென் றனக்கு - நன்மலர்ப் பாதமென் சென்னியிற் பதித்துத், தாயினுஞ் சாலத்த யாவுறப் பரிந்து - தாமறப் பொழிந்திடுங் கருணைநற் கடலே, யாயுநற் பிரமம தாக்கியு மமையா - தருட்கனை யளித்தமை யடியனேன்



றமே, நீயெனைப் பணிகொளு மாறது கேட்போ - நின்மல னேபள்ளி யெழுந்தரு ளாயே. 11

**சிவப் பிரகாச ஸ்வாமிகள் திருப் பள்ளி யெழுச்சி முற்றிற்று.**

---

## சொரூபாநந்த சுவாமிகள் திருப் பள்ளி யெழுச்சி.

---

ஒருதிரு வொளியிலென் மதியொளித் துள்ளத் - தாமரை மலர்ந்துகண் ணீருகுத் ததுபோற், பரிதியி னொளிவரப் பனிமதி யொளித்துப் - பங்கய மலர்ந்துகண் ணீருகுத் தனவாற், கருதியு னடியிணை தொழநினைந் தொருமுக் - கடவுளு மமாருங் கடைத்தலை யணைந்தார், சுருதிக டொடர்சொரு பாநந்தச் சுடரே - சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. 1

மாவின மளிகனி செயமனங் களித்து - வாழுமங் குயிற்குலத் துடன்வளம் பெருகக், கூவின வாரணம் பத்தியுட் புகுந்து - குழுமிய சங்கநல் வலம்புரி யுனக்காப், பூவென விசைத்தனர் வீணையங் கிழவர் - பொருந்தினர் திருந்தடிப் போதுடன் கண்ணீர், தூவினர் பெருஞ்சொரு பாநந்தச் சுடரே - சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. 2

ஊன்றனை நானென நினைந்துனை நினைய - வுளமிலி யேசெய்த களவினுக் கெல்லாஞ், சான்றது வாகிநின் றமையறிந் தடியேன் - றரிக்ககி லேனெனத் தானுவந் தருளி, யீன்றவ ளினும்பரிந் தென்பிழை நினையா - தென்னைவந் தாளவிந் நிலத்தொரு வடிவாய்த், தோன்றின னேசொரு பாநந்தச் சுடரே - சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. 3

கெழுமடி யார்கள்சங் கீர்த்தன மொருபாற் - கேட்கவு மரிய நின் ருட்கம லங்கண், டழுமடி யாரொரு பாலொரு பால்வே - தாகம புராணகீ தாதிக ளன்பா, லெழுமையு மாள்கவென் றேத்தொலி யொருபா - லிமையவ ரிடருற வின்பமுற் றடியேன், றொழுமடி யாய்சொரு பாநந்தச் சுடரே - சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. 4

திகைத்திட மூவருந் தேவரு மறையுந் - தீவினை யெனையாண் டனைதிரு வருளின், மிகைத்திற மென்சொல்லி வியப்புற வடி யேன் - வேண்டிய வாவிளை யாடவீ டளித்தா, யுகைக்குமைம் புலன்களு முறுபகை யாறு - மோங்கெழு பிறவியு முதிரவென் றலையிற், றுகைத்தவ னேசொரு பாநந்தச் சுடரே - சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. 5

நோக்கிமுன் வினையற நுகர்வுறு விடய - நோக்குமிந் தியங் களின் போக்கறுத் தகத்தே, தாக்கிய வாதனை தன்னையுந் தவிர்த்துத் - தமத்தினைக் கடந்துணர் சாக்கிய தாக்கிச், சாக்கியஞ் சான்றொடத் தமித்துநின் றொளிருந் - தற்சொரு பமுமுப சமித்துனி லொன்றத், தூக்கின நற்சொரு பாநந்தச் சுடரே - சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. 6

முன்னவ னேமுடி வேயடி யேனை - முடிவிலின் பத்துற முழுத்துபே ருததி, யன்னவ னேயக நிறைந்தவா ரமிர்தே - யண்டமெண் டிசைசரா சரமள வற்ற, பின்னவ னேகமெல் லாமொரு மொழியிற் - பிறிதறத் திகழநின் பேரொளி யாகச், சொன்னவ னேசொரு பாநந்தச் சுடரே - சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. 7

கடலுறு திரைநுரைக் கணமெழுந் தடங்கக் - கனைகட லெழுந்தடங் காவகை போல, வுடலுயி ருணர்விவை யுனிலெழுந் தடங்க - வொன்றினி லடங்குத லுதித்தவில் லவனே, விடலரும்



வினையிரு ளிடையலம் வருவேன் - வீடுகண் டிடர்கெட வெளிப்பட வந்த, சுடரொளி யேசொரு பாநந்தச் சுடரே - சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. 8

இடவிய படத்தினி லெழுதுசித் திரங்க - ளெல்லையில் பலவுள போலிருந் தாலுந், தடவிய பொழுதிலப் படமல தில்லாத் - தன்மைய தெனவிறை தந்தமெய் விழியாற், றிடவிய திருவுரு வல்லது காணேன் - றிருவருள் பெறத்தவஞ் செய்தவர்க் கல்லாற், றொடர்வரி யாய்சொரு பாநந்தச் சுடரே - சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. 9

மாயவ னேவடி வில்லதோர் வடிவே - வடிவுகொண் டவனி யில் வந்தெனை யாண்ட, தாயவ னேமிகு தத்துவப் பயனே - சங்கர்ன் மாலயன் றமக்கரும் பொருளே, வாயவ னேயடி யேன் மனத் தவனே - வாக்கொடு மனமுற நோக்குதற் கரிய, தூயவ னேசொரு பாநந்தச் சுடரே - சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. 10

சொருபாநந்த சுவாமிகள் திருப் பள்ளி யெழுச்சி முற்றிற்று.

---

## தத்துவப் பிரகாச நாயனர் திருப் பள்ளி யெழுச்சி.

---

வாழிய வாழிய மறைமொழி முடிவே - மக்களு மனைவியுஞ் சுற்றமும் பொருளு, மீழ்கய மதனிடைத் தாமரை யிலைநீ - ராகிய வியல்பினை யழகுறக் காட்டி, வீழ்தரு மூனுயிர் வேறுமப் படியே - விளங்கிட வருள்செய்து விண்ணவ ரெல்லாந், தாழவு மரியபொற் றுளிணை தருவாய் - தத்துவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. 1

மாகரு முநிவரு மறைகளு மறியா - வளங்கெழு தாமரை
மலாடி யடியேன், சேகா மிசையினி லழகுறச் சேர்த்துத் -
திகழ்நன வுங்கன வுங்கெட வைத்துப், போகரு மையும்வா
வருமையும் நிகழும் - புரையறு தொம்பதத் துரிசறு கரியைச்,
சாகரத் ததில்நன்கு தந்தருள் பவனே - தத்துவ னேபள்ளி
யெழுந் தரு ளாயே. 2

பண்டுள மதத்தினைப் பாரென வடியேன் - பார்த்தது
கண்டிலேன் பார்க்குமக் கரியே, கண்டன னெனவதிற் கண்செவி
கைகால் - கடைநடு முதலிரு புறம்பின்முன் கீழ்மே, லுண்டுகொ
லோவென வொன்றையுங் காணே - னொழிவறு மறிவதெ
னெழிலுரு வெனவே, தண்டிவந் திணையடி தந்தருள் பவனே -
தத்துவ னேபள்ளி யெழுந் தரு ளாயே. 3

போக்கிய வுலகுடல் சாக்கிய மாக்கிப் - பொருந்திட
வடியனுக் கிருந்தமை யுரைத்த, வாக்கியங் கேட்டது மாற்றிய
பின்னே - மன்னிய பாபுரத் தென்னைவைத் தவனே, பாக்கிய
பலமென வந்தநின் னருளாற் - பவமணு காவகை யதுபாம்
பொருளைத், தாக்குத லொழிதா மொழிதரு பவனே - தத்துவ
னேபள்ளி யெழுந் தரு ளாயே. 4

அயனொடு மாயவ னுலகுக ளவர்க்கே - யருளுதன் மாற்றுத
னினதரு ளெனவே, நயனுடை மொழிசெவிப் புலத்துமுன்
னறிந்த - நானவ ராயநு பவித்தது மன்றிப், பயனுடை
யுருத்திரன் மகேசனு மாக்கிப் - பழித்தபின் சதாசிவ மளித்ததும்
பழித்தாய், சயமுறு மதிற்பாம் பொருளெனக் கருள்வாய் - தத்துவ
னேபள்ளி யெழுந் தரு ளாயே. 5

இப்படி யிதுவென வியம்புத லரிதா - மிறையுறு காரண
வுபாதியை விழுங்கி, யப்பொரு ளறிபொரு ளாகிய பாமா -
யளவறு பௌதிக பூதமு மாகி, யெப்பொரு ணிகழுவ ததுதனை



யடியே - னெலயில தாகிய பவங்கெட வருளாற், றற்பா
வொளியென வருளிய பரனே - தத்துவ னேபள்ளி யெழுந் தரு
ளாயே. 6

என்னிடை நீயுமற் றுன்னிடை யானு - மிருந்தபி னிரும்
பெரும் பொருளவை யெவையுந், துன்னிய வுலகமு நீயு (மின்னு)
மப் பரிசே - தோற்றிய நிலைமையு மாய்த்துள வுன்னே, மன்னிய
காதல மணியெனக் காட்டி - வருவது போகுவ தாகுமென்
பிறவி, தன்னையொர் நொடியினில் வேறுத் தவனே - தத்துவ
னேபள்ளி யெழுந் தரு ளாயே. 7

நீந்தரும் பெரும்பவக் கடலிடை வீழ்ந்து - நெடுங்கரை
யேறுதற் கலமரு வேனை, யேந்தியுன் றிருவடி யாகிய கரைக்கே -
யிளைப்பற விருத்திய வளப்பெருங் கடலே, வாய்ந்தசிற் கனம்புகுங்
காலமி தெனவே - வருமித மளித்தேயென் பெருமத மழியச் -
சாந்திதந் தவிபத மாக்கிய வரசே - தத்துவ னேபள்ளி யெழுந் தரு
ளாயே. 8

விதிமுறை காரிய காரண மாறி - விளம்பிய வுயிர்பாம்
விளங்கிய வதுபோ, லுதிதம தாகிய வாதனை மாறி - யொளி
மண முதலிய நிகர்சிவ மருளி, முதியநான் மாமறை முடிமொழி
நாலு - முனமென முறைமுறை யினமற விறந்த, சதுர்பட விருந்தவப்
படியிருந் தவனே - தத்துவ னேபள்ளி யெழுந் தரு ளாயே. 9

பங்கயந் திநகரற் குதவிய தெங்கே - பயோதா மதற்குல
குதவிய தெங்கே, யிங்கிவை யொழியவென் செயலுமப் படியே -
யென்பிறப் பறுத்தநீ யென்பெறக் கடவா, யங்கமோ டுயிர்பொருண்
முன்னுமுன் னனவே - யாயினுங் கொண்டனை யவ்வழி யடியேன்,
சங்கையி றெழும்பல தேதுமற் றறியேன் - தத்துவ னேபள்ளி
யெழுந் தரு ளாயே. 10

**தத்துவப் பிரகாச நாயனார் திருப் பள்ளி யெழுச்சி முற்றிற்று.**

---

## பரிபூர்ணப் பிரகாச நாயனர் திருப் பள்ளி யெழுச்சி.

உற்றறி வெழவுள விருளகன் றதுபோ - லுதயம்வந் தெழவுடு வொளியகன் றனவா, னற்றுட லுயிர்பொரு ளப்புடன் கவர்ந்து - நாண்மலர்த் தாளிணை நாயினேற் கருளிச், சற்றென விசுவசாக் கிரகா ணங்கள் - சதுர்த்தச செலவுநன் கலப்பழிப் பொன்றிற், பற்றுத றிசைமுகர் பதமென வருளப் - பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளர்யே. 1

அண்டரும் பரமெழ வறிவகன் றதுபோ - லாதவ னெழவுடு மதியகன் றனவா, லெண்டிசை தொறுந்திரிந் தெனையறி யாதே - யெய்த்தெனை யாண்டுதை சத்தெனு மதிலே, கண்டுகொள் கனவையிவ் வணமென விருத்திக் - காமிய தாமதுட் காணங்க ளுடனே, பண்டுல களந்தவர் பதமென வருளப் - பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. 2

பத்துட னுலேயும் பதைப்பற விருத்திப் - பாரிருந் திவ்வண மென்றருள் புரிய, வத்தம திருவம தாயின தென்ன - வதுமிகு சுழுத்தியவ் வியத்தமா மாயை, யுத்தம வுருத்திர பதமுநற் ப்ரகிர்தி - யுனதுட லாமுதற் பாழ்சகல் லக்கணை, பத்திய தறிபிராக் ஞன்னென வருளப் - பர்பூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. 3

விரிவுறு காரிய வுபாதிக ளெல்லாம் - வேறுசெய் தறிவிராட் புருடனை யெனவுங், கரியது வாகிநின் றன்னவை முழுதுங் - கழன்றன சம்சர்க்க வாக்கிய மதனுற், றுரியம துனையறி தொம்பத மகேசர் - சொல்லுமுற் பூரண சோதியி லென்னைப், பரநன விற்கா மணியென வருளப் - பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. 4



காலமு ஞாதரு ஞானமு ஞேயமுங் - கண்டன னென்னிவி ராசத மாயை - மேலொடு கீழ்பக்கம் மேவிடு பின்முன் - விரிவுறு மவைபவ மாயின வெல்லாஞ், சாலவு மிரணிய கர்ப்பமு மிதுதான் - சதாசிவ கால பரன்கன விதுவெப், பாலுயர் காரண வுபாதியென் றருளப் - பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. 5

இதமக மறவிரு விவணமென் றருளி - யெழில்பா சுழுப்த்திகா ரணுதியற் றதுவா, மதீதம திதுவச கல்லக்கணையா - லாசறு சொல்லுறு பாழிரண் டாம்பாழ், பொதுவது புகவது போந்தட மன்றிப் - போதமு மழுங்குமவ் வியாகிருத மிறுகல், பதியுடல் சதாசிவ பராசத்தி யருளப் - பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. 6

அருவமு முருவமு மாகிய பொருளே - யதீதமென் றருளிய தழித்தது வறிந்த, பொருளுணர் வதுபரம் விசிட்டவாக் கியத் தாற் - பொருவில்சிற் சொருபந்தற் பதப்பொரு ளதுவா, மிருநில னெனமுத லருளிய பரிசே - யெழிலிரு பூரணத் தியல்குரு நனவிற், பாமுற வெனதெழு பவமறுத் தருளப் - பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. 7

மலமறு குருபதக் கனவினின் மருவு - மாசறு மாணவ சாத்திக மதனு, லுலகமொ டுயிருதன் மாத்திர பாமா - யுணர்ந்தது வேப்ரசா பத்தியென் றருளி, நிலவிய பரமம தாயவை முழுது - நிகழ்ந்தில வெற்கென நெடியவர் முதலே, பலவுல குண்டது மிதுவென வருளப் - பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. 8

ஓிரார்ச கதசகல் லக்ஷணை யதனுற் - செகமுழு துண்டதொர் செருக்கற மிகவே, யோர்குரு சுழுத்தியி லிருத்துப சாந்த - மிரு பதப் பொருளுமொன் றுக்கிநின் றுளிர, வோருட லுயிரறி யொண்பா முழுது - மொன்றுமுப் பாழுரை யிறந்திட மதுவாய்ப்,

பாரியல் சமைவுபி ருதுவியென் றருளப் - பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. 9

ஆரண முடிவினி லசிபதப் பொருளை - யருளுமுப் பூரண பூணுபி ஷேகச், சீரணி யடிகளென் சென்னியிற் சேர்த்திச் - செறிதர வகண்டவாக் கியமத னலப், பூரண துரியமென் மோகநல் விழியாற் - புணர்குரு சத்திய மாதியுற் பலத்திற், பாரென நடித்துனி லையிக்கிய மாக்கும் - பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. 10

பரிபூர்ணப் பிரகாச நாயனுர் திருப் பள்ளி யெழுச்சி முற்றிற்று.

---

## சொருபாநந்த சுவாமிகள் திரு வெம் பாவை.

### வெண் டளையான் வந்த இயற் றர வினைக் கொச்சகக் கலிப்பா.

---

எல்லையிலாப் பாவகத்தா லெத்தனையோ காலமுநான் - மல்கிய வல்வினையா மாயமலர்ப் பள்ளியிலே, புல்லித் துயின்று புரையாய பொய்ப்பிறவித் - தொல்லைக் கனவிற் றுயருழந்து சோர்வேனை, யல்லிக் கமலத் தயன்மா லறிவரியான் - கல்லைப் பிசைந்து கனியாக்கும் விச்சையினுற், சொல்லற்று நின்று சுடரு முணர்வாக்கி - மெல்லத்தான் மிக்கானைப் பாடேலோ ரெம்பா வாய். 1

நில்லாத செல்வத்தை நித்தமெ னுங்கருத்தாற் - பொல்லா விடயத்தே புக்குறங்கு கின்றேனைச், சொல்லான் மனத்தாற் றெரட்ர்வரிய நற்சிவம்வந் - தெல்லே யெழிறிகழு மேனி யதுசாத்தி, நல்லாளோர் பாகனுய் நாதன் வலஞ்சுழியான் - வல்லாள னென்னை யெழுப்பி யுணர்வாக்கி, யொல்லாத பாவனையி னுள்ளே யுறவழுத்தி - யெல்லாங் கழற்றியவா பாடேலோ ரெம்பாவாய். 2



அஞ்ஞான மூடி யகல்கின்ற வாரிருளாம் - பொய்ஞ்ஞால மென்னும் புரையிற் றுயிலாதே, பைஞ்ஞா ணரையானற் பார்ப்பதியோர் பாகத்தா - னெஞ்ஞான முங்கடந்த வெந்தை வலஞ்சுழியான், செஞ்ஞாயி றென்னத் திகழும்பொற் சேவடிக - ளஞ்ஞான மாய வெழுந்ததுகா ணுயிழையீர், மெய்ஞ்ஞான மாகநமை வேதித்த மெய்யருளே - பஞ்ஞாவு ளமுருகிப் பாடேலோ ரெம்பாவாய். 3

அறியாமை யென்னு மழியாத மாயப் - பிறியா வினையிலினந் துஞ்சுதியோ பேதாய், முறியாத வின்ப முழுவெள்ள முன்னேன் - செறிவாரைத் தானுகச் செய்யும் பெருமான், சிறியோமை யாண்டருளுந் தேசிகனுய் வந்தான் - வெறியார் குழன்மடவாய் வெய்யவிருண் மாண்ட, தறிவா யெழுந்ததுகா ணுநந்த வெள்ளக் - குறையா நிறைவினையே கூறேலோ ரெம்பாவாய். 4

கோதாடு மின்சொற் குதலைக்கி ளிமொழியார் - வேதாள மையலிலே வீழ்ந்தே கிடப்பேனை, ஞாதாவ ருஞ்சிவ ஞுதன் வலஞ்சுழியான் - பாதார விந்தப் பராவமிர் தம்பணித்து, மாதா வெனமுன்னி வந்தெடுத்தாட் கொண்டருளிப் - பாதாள மேழுலகு மேனிலமும் பாவெவையு, நீதானெ னவருளி நித்தமாந் தன் னிலைமை - யோதாமை யோதியவா பாடேலோ ரெம்பாவாய். 5

மேன்மை குலங்கல்வி விழுப்பமெ னுஞ்செருக்கான் - மான மெனு மையலுளே வாளா கழிவேனை, நான்மறைக ளுடரிய நற்சிவனோர் மானிடனுய் - வானவருங் காணு மலரடியென் சென்னிமிசைத், தானமர வைத்துத் தமியேனை யாண்டருளி - ஞானமுடன் ஞேயமற ஞாதுருவஞ் ஞானமழித், தானமு முதினையு மங்கே யறவிழுங்கித் - தான்முழுது மானவா பாடேலோ ரெம்பாவாய். 6

மண்ணாகி வானாய் வளியா யெரிநீரா - யெண்ணாகி யெல்லா வுயிர்க்குயிராய் நின்றானை, நண்ணாது நாயே னடலைப் பிறவிதனிற் - புண்மூடி வைத்த புழுவார் குரம்பையினின், றெண்ணா தழிவேனை யெந்தை வலஞ்சுழியான் - கண்ணா ரமிர்தன் கழல்காட்டி யாண்டருளி, யுண்ணே ருணர்வாக்கி யோர்வரிய பாவனையும் - பண்ணா வழித்தானைப் பாடேலோ ரெம்பாவாய். 7

முத்தனை மூலத்த னிச்சுடரை முற்றுமாஞ் - சுத்தனைச் சோதிசொ ரூபானந் தக்கடலை, யெத்தன்மை யோருக்கு மெய்தரிய சேவடியை - யித்தன்மை யோர்சிறியோ ரென்னாத ளித்தருளும், பித்தனைப் பேத மபேத முபயமற - வொத்துணர்வே யாக்கி யொழியா நிறைவளித்த, நித்தனை நின்மலனை நீடொளியை நிர்க்குணனை - யத்தனை யாரமிர்தைப் பாடேலோ ரெம்பாவாய். 8

தானே முழுதாய்த் தழைத்துமுத விற்சிதையா - வானோர் பெருமான் வலஞ்சுழியா னென்றென்றே, நானே யரும்பி விழுந்தெழுந் தோவலறேன் - வானோரு மண்ணோரு மற்றெவருந் தாமறியாத், தேனார் மலரடியென் சென்னியி னிற்பொறித்து - நானாகி நின்றந டுவநி லையழித்துத், தேனே யமிர்தமே கன்னல்சே ரின்சுவையே - கோனே யாய்நின்றவா கூறேலோ ரெம்பாவாய். 9

கல்வியெனும் பல்கடலிற் கானலமிர் தம்பருகி - யெல்லையில் பல் சமயத் தெய்த்தே கழிவேனை, யல்லலறத் தன்கருணை யார மிர்தத் துள்ளழுத்தி - நல்லமலர்ப் பாத நாயேற் கினிதளித்துச், செல்லலறத் திருத்தித் தேற்றி யுணர்வாக்கி - மெல்லவியோ மத் தழுத்தி மிகுவே தகத்தே, செல்ல வளித்த சிவபெருமான் றன்கருணை - யெல்லையி லாதவா பாடேலோ ரெம்பாவாய். 10

கற்போலு நெஞ்சங் கரையக் கருதரியா - னிப்பாலு ருவாகி யென்னுட் புகுந்தருளித், தற்பாற்ப டுத்திச்ச தூழித்துத் தானெனக்குச் - சொற்பான் மநப்பால் சுருதிப்பா லென்றியம்பு,



மப்பாலைக் கப்பாலவ் வானந்த மாக்கியவப் - பொற்பே நினைந்து பதைத்தலறிப் போதக, வப்பா வடியேனை யாண்டசொரு பாநந்தா - வொப்பாரி லாதாயென் றாடேலோ ரெம்பாவாய். 11

களியாத வின்பக்க ளியாகு மன்பர்க் - கொளியாகு மல்லா தார்க் குள்ளத்தே நின்றும், வெளியாகா னாயேனை மீட்டவா சொல்லிக் - களியாது பாவியேன் கல்லென்ன நெஞ்சி, னொளியாகி புண்ணின் றுருக்கிக்க ரைத்தா - னளியோ வளவில்லை யந்தோ தரியேன், றெளிவாகி யொத்துணர்வாய்த் தேனாறுஞ் செய்ய - வளிசே ரமிர்தைமுகந் தாடேலோ ரெம்பாவாய். 12

ஒன்றாகி வேறா யுருவா யருவாகி - யன்றாகி யாமா யழிவாகி யாக்கமுமாய்க், குன்றாத சீராய்க் குறைவாய் நிறைவாகி - நின்றா னுயிர்கட் குயிரா யொழிவின்றி, யென்றாலெ னெம்மைப்போன் மானிடனாய் வந்தருளிப் - பொன்றாமே நாயேனைப் போதவ டி வாகத், தன்றா ளிணையருளி லல்லதுசா ரவொண்ணா - வென்றாதை யென்னரசென் றாடேலோ ரெம்பாவாய். 13

எங்கோன் வலஞ்சுழியா னென்றென் றிராப்பகலா - நங்கோல் வளைசோர நாயேற்கு முன்வந்து, தங்கோலங் காட்டித் தமியேற் கறிவருளி - யங்கே யமிர்தூறு மாநந்தத் துட்கலந், திங்கே யெமைச் செய்த தென்னென் றெடுத்துரைப்போ - மங்கோ ரவனை யறியா தார் மாலயனா, மிங்கே யிவாறிதல் பித்தென் றுலகாற்ற - நங்கோ னருட்கடல்சேர்ந் தாடேலோ ரெம்பாவாய். 14

ஆரா வமிர்தை யடியேற் கெளிவந்த - போரா வொளியைப் பிதற்றி நினைதோறு, நீரா வுருகியெ னாவிநெ டுங்கண்கள் - சோரா விதிர்விதிராச் சொற்றளர்ந்து மெய்யரும்பத், தாரா யெனவலறேன் றாபரியேன் மேன்மேலு - மாராக நானும்

னடியார்கண் முன்னந்தோ, தீராத தீவினையைத் தீர்த்த சிவக் கனியே - யாராத வன்பை யருளேலோ ரெம்பாவாய். 15

பொன்னு ரடியானே போற்றினர்க்கு மெய்ப்பொருளே - யன்னு ரமிர்தத் திரளே யடியேனைக், கன்னு ருரித்த கருணைத் தடங்கடலே - யன்னேநா னுவா வறியே னழிந்தொழிந்தேன், பன்னு வமிர்தப் பரங்கருணைத் தேன்பருகி - நின்னு ரடியவரு நீயு மெ ழுந்தருளி, யென்னுவ தீரவெ ழிலாருங் கூட்டத்தை - மன்னே யருண்மற்று வேண்டேலோ ரெம்பாவாய். 16

வானோர் பிரமன் புரந்தரன்மான் மற்றெவருங் - கானே படர்ந்துலர்ந்தும் புற்றெழுந்துங் காண்பரியா, ஞானே வடிவா யுழலுமெனைத் தான்வந்து - தேனுர் மலரடியென் சென்னியி னிற் சேர்த்து, நானேநீ யென்றருளி நம்மையழித் தாட்கொண்ட - கானே யமிர்தே கரும்பே யெனவிரும்பி, யூனே யுருகி யொழியாத நற்சொருபத் - தேனே பருகிமகிழ்ந் தாடேலோ ரெம்பாவாய். 17

தோற்றும் பொருண்முழுது மென்கண்ணிற் றேற்றியபின் - னுற்ற வவைமுழுதும் யானே பிறிதில்லைத், தோற்றும் பொருளுஞ் சொருப மெனவுரைத்தா - யேற்றிய விப்பொருணீ யாமாறென் னென்றூர்க்குத், தோற்றுவதுன் கண்ணாலே பார்த்துத் துணியி னல்லாற் - சாற்றுவதென் னந்தோ சங்கரா வாற்றுகிலேன், றேற்றத் தெளிவே திகழ்ந்திருகா வென்மநக்க - வூற்றத்தை யொல்க வருகேலோ ரெம்பாவாய். 18

அண்ணு வமிர்தே யடியேனை யாண்டருளிக் - கண்ணுகி யென்றன் கருத்தழித்த கற்பகமே, யுண்ணு வமிர்தே யுடையானே யுன்றனைநான் - கண்ணாரக் கண்டு களித்தேன் கருதரியாய், பெண்ணோ வலியுருவோ வானோ பிறவெவையோ - வெண்ணோவி



யாயென்றூர்க் கென்னுரைக்கே னெம்பெருமான், விண்ணோ ரயரா வினையேனை யாண்டதிற - மண்ணு வடியேற் கருளேலோ ரெம்பாவாய். 19

போற்றியென் சென்னிபொ றித்தநற் சேவடிகள் - போற்றி யென் சிந்தைப்பு ரையறுத்த பொன்னடிகள், போற்றியென் னுள்ளம்பு குந்தம லரடிகள் - போற்றியென் னுள்ளம ழித்தசெம் பொற்கழல்கள், போற்றியு ணர்வாகி நின்றபொற் றாமரைகள் - போற்றிவி யோமமுமாய்ப் போய்மிகுத்த பூங்கழல்கள், போற்றி குறையாகி றையாத பேரின்பம் - போற்றி புகழ்ந்துருகி யாடேலோ ரெம்பாவாய். 20

சொருபாநந்த சுவாமிகள் முதல் திரு வெம் பாவை முற்றிற்று.

---

## சொருபாநந்த ஸ்வாமிகள் இரண் டாந் திரு வெம் பாவை.

### வெண் டளையான் வந்த இயற் றர விணைக் கோச்சகக் கலிப்பா.

---

ஓத வரிதென் றுபநிடங்க ளோதுபொருட் - பாத மளித்த பரிசினை யாம்பாடப், பேதையர் போலத் துயிலுதியோ பெய் வளையாய் - நாதன் றிருநாமங் கேட்டலுமே நாட்டங்க, ளோத மெடுப்ப வுரோமஞ் சிலிர்த்திருகுஞ் - சூதன கொங்கைச் செயல் சொல்ல லாமளவோ, வீதே யருள்பெற்ரு யாரே யிவளல்லான் - மாதே வினைவியந்து வாழ்த்தேலோ ரெம்பாவாய். 1

சிட்டம றைப்பொருட்டன் சீரடியார் கூட்டத்தை - யெட்டனைப் போதும் பிரியா யிதுகால, மட்டலர் கோதாய் வளருதியோ மாதரீ - ரெட்டியோ சந்துக் கிரவிக்கு மின்மினியோ, கட்டக் கு ளப்படிநீர் கங்கைப்பு னற்கொப்போ - வட்ட வுருவ னடியர்குழா

நான்கூடு, மட்டமோ வீதொழிய வாய்வந்த வாறுங்க - ளிட்டமே சொல்லு மெமையேலோ ரெம்பாவாய். 2

இந்திரசா லப்பி றப்பறுக்க வெம்போல - வந்தபெ ருமானை வாழ்த்துதொறும் வாழ்த்துதொறுஞ், செந்தழல்சேர் மெழுகாஞ் செல்வி கடைதிறவா - யெந்தாமு மன்புக் கிசையாதே யாயிடினு, முந்துமுரை பொய்யாமை யுண்டாக வெங்கட்குங் - கந்த மலர்க் குழலி கைதவ மல்லகாண், சிந்தையி லுண்மை திருவுள்ள மேயறியு - மெந்தம் விருப்பமுமிங் கீதேலோ ரெம்பாவாய். 3

திண்ணமா வாணோ வலியோ தெரிவையோ - வண்ணந்தான் செய்த்தோ வெளிதோ மாகதமோ, வண்ணிதோ சேய்த்தோ வருவோ வுருவோவென் - றெண்ணி யறியா திமையோர்க ளேமாக்கக், கண்ணெதிரே வந்தாண்ட கண்ணைக்க ருமணியைப் - பண்ணைச் சுவையின் பயனையாம் பாடவுன், கண்ணுந் துயிலுமோ கண்ணா ரமிர்தான - வண்ணனை வாயாரப் பாடேலோ ரெம்பாவாய். 4

வாட்டடங் கண்ணி வளருதியோ வானவர்கள் - கேட்டும றிவரிய கேடில்வி ழுப்பொருடான், காட்டிக்க ழலெமது கண் களிப்பச் சென்னிமிசை - சூட்டிக்க ரணங்க ளெல்லாமுந் துஞ்சும் வகை, மீட்டவி ரகுந்தன் மெய்யுணர்மெய்ஞ் ஞான - நாட்டம ளித்த நலனு நவிறேறும், வாட்டடங் கண்பனிப்ப வாயார நாம்பாடித் - திட்டு நுதலாய் திறவேலோ ரெம்பாவாய். 5

எல்லை யிருவர்க் களப்பரி தாய்நின்று - சொல்லும் பொருளுங் கடந்த சுடரொளிந, மல்லற் பிறவியற வாரருளா லைம்புலனும் - புல்லத் திருமேனி சாத்திப் பொலன்கழறந், தெல்லையி லின்பத் தழுத்தி யெமையாண்ட - வல்லபம் பாடி வழுத்த மடமாதே,



கல்லு முருகாதோ கண்ணுக்குங் கண்ணானை - யெல்லாமா யல்லானைப் பாடேலோ ரெம்பாவாய். 6

வேதமு டிவுக்கு மேலாய விண்ணவர்க்கு - மீதென் றுணர் வரியா னெங்கட் கெளிவந்த, நாதனை யல்லா னவிலாய்நல் லன்பர்சொலுங் - கீதம லாற்செவியிற் கேளாய்நீ கேட்டொறுங் கண், ணோதமெ டுக்க வொழியா யுடையான்சீ - ரோதவு ணரா துலகத்தார் போனீயுஞ், சீதம லரமளி சேரப் பெறுதியோ - மாதேது யிலுணர்ந்து வாழ்த்தேலோ ரெம்பாவாய். 7

ஆதிம றைப்பொருட்கு னன்புடைமை யெப்போது - மாதே குலவும் பரிசு மறந்தனையோ, மேதினியோ ரந்தரத்தி லுள்ளோர் விசும்புள்ளோர் - பாதலத்தோ ரியாவர்களுங் காணாப்ப ரஞ்சுடரிப், பூதலத்தே போந்தருளிப் பொன்னங்க ழலளித்த - நீதியெலா நின்று நெடும்போது நின்கடைக்கே, யோத வுணரா யுடையானுக் கன்புடைமை - யீதே யிருக்கும் பரிசேலோ ரெம்பாவாய். 8

மாயவற்கும் போதின்ம றையவற்கும் வானவர்க்கு - மாயு மறைக்கு மரியாயெ மக்கெளியாய், நேயமிக நின்னை நினைதோறு நெஞ்சுருகத் - தூயசொரு பனென்றுயாஞ் சொல்லுதோ றுங் கண்ணீர், பாய நினது பழவடியா ரெங்கட்கு - நாயக ராகவடி நாயோந் தலையாலே, தூயவ வர்பதத்தா லேவுந்தொ ழில் செய்ய - வேயிற் பிறவி யினிதேலோ ரெம்பாவாய். 9

ஆராய மேனா ளடியு மணிமுடியு - நாரா யணருக்கு நான்முகர்க்கு மொண்ணாத, சீரானைச் செப்புவகை யென்னென்று முன்னமறை - யோரா யிரமுகத்தா லோதவு ருநாம, நோராக வில்லாத நிர்க்குணனைச் சொற்கொடுநாம் - போராயி ரமுடையா னென்றுரைத்தோம் பேதமையா, லோர்நாம மோருருவ மொன்று மிலா வொண்சுடரை - யார்நாம் பாரவ வறிந்தேலோ ரெம்பா வாய். 10

வாசம லர்ப்பொய்கை புக்குவ ளைக்காமுந் - தூசங்க லனு
மொ லிப்பத்து டுமெனப்பாய்ந், தீசர்க்கு மீசனென் றேமறைக
ளேத்துகின்ற - தேசன்றி ருமேனி சாத்தித்தி ருவருளாற், பாசம
றநயநப் பங்கயத்தாற் பார்த்தருளிக் - கூசாமற் சென்னிமிசை
வைத்துக் குரைகழல்கள், வாசக மொன்றினுல் வாசாம
கோசரத்தைப் - பேசிய வாபாடி யாடேலோ ரெம்பாவாய். 11

ஆர்த்த பிறவி யறுத்தருள வாரருளாற் - பார்த்த திரு
நயநப் பங்கே ருகம்பாடிச், சேர்த்த திருக்கை மலர்பாடிச்
சென்னிமிசை - யாத்தமா வைத்த வருட்சே வடிபாடி, யோர்த்த
வருமறைக ளோரா யிரமுகத்தா - லேத்த வரும்பொருணு
மீதென்று காணவொரு, வார்த்தை யருள்செய்த மாவல் லபம்
பாடிப் - பூத்த புனற்றடம்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 12

அங்கயன்மே லாதலா லாருயிர்க்கா தாரத்தா - லெங்குந்
துறையா யிருத்தலான் முத்திவருஞ், சங்கங் குலவுதலாற்
றண்ணளியாற் றன்கணே - யங்கமல மாதலா லங்கமலம்
போக்கலா, லங்கழுநீ ருண்மையா லந்தணர்கொண் டாடுதலா -
லெங்கோனே யென்ன வெழிலா ரிருஞ்சுனையின், மங்காமை
நம்மை வலிந்தாள வந்தருளும் - பங்கே ருகம்பாடி யாடேலோ
ரெம்பாவாய்.
13

ஓசையா யூறு யுருவா யுறுசுவையாய் - வாசமாய் வாக்காய்
மநமாகி மன்னுயிராய்ப், பாசமாய் வீடாய்ப் பகலா யிரவாகி -
யீசனு யாவர்க்கு மெல்லாமா யல்லாத, தேசன் சிறியேற்குச்
செம்பொற் கழலளித்த - நேச வருளை நினைந்து நினைந்துருகி,
யீசனை வாயார வெப்போதும் யாம்பாடி - வாச மலர்த்தடம்பாய்ந்
தாடேலோ ரெம்பாவாய்.
14

வாணயநம் பனிக்கும் வாழ்த்து மநங்கவர்ந்தா - னுணவி
பெண் ணல்லா னெனினு மழகியவா, காணீரென் கண்ணுலே





யென்னுங் களிகூரு - நாண மிழந்தா ணறுநுதலார் தன்னகையுங்,
காணுள் கலைபேணுள் கற்பனையுந் தான்கேளா - னுணனு
முறக்கு மொழிந்தாண்மற் றும்பரையும், பேணு ளிவளையிங்ஙன்
பித்தேற்றும் பெற்றியனைத் - தானுவை யாம்பாடி யாடேலோ
ரெம்பாவாய்.
15

வானகமும் வையகமு மெல்லாம றைப்பொருடான் -
போனகமாக் கியவா போலப் புணரியெலாம், பானம் பருகி
யெழுந்து பரன்போல - வானை யறநிறைந்து மாமாயா வல்லி
யென, மேனி மிகக்கருகி மெய்யுளம்போல் வில்லிட்டு - ஞாநம்
போன் மின்னியரு நான்மறையி னேர்முழங்கித், தானந்த
மில்லாதான் றந்தவா நந்தத்தை - மானப் பொழியாய்
மழையேலோ ரெம்பாவாய்.
16

வானோருங் கோனும் மலரோனு மாலோனு - மேனோருந்
தானு விறைவன் றிருவருளான், ஞானோ தயமுன்னர் ஞாலம்
போன் ஞாயிறெனும் - பானு தயத்திற் பனிமதியந் தாரகையா,
மீனே குவபோல் விழியால் வினைநீக்கி - யூனே ருயிருடைமை
கைக்கொண் டொருமொழியாற், றுனகத் தந்தருளும் தம்பிரான்
றுள்பாடி - மானே மலர்த்தடம்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 17

மிதியாநஞ் சென்னிமிசை வேதா கமங்க - ளிதிகாச மெல்லா
மெடுத்துரைத்த வின்பக், கதிகாண நாமுமெலாங் கைக்கனிபோற்
காட்டி - விதியோனு மாலும் விடையோனு மொன்று, முதியோர்
பாவிவரு மூவர் பதமு - மதியே மெனநம்மை வாழ்வித்த நாதன்,
பதியா நமக்களித்த பங்கயத் தாள்பாடி - மதுவார் மலர்த்தடம்
பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 18

அந்தா மரையயனு மாலு மறிவரிய - செந்தா மரைப்பதஞ்
சென்னி யுறச்சேர்த்திச், சிந்தா குலந்தீரச் செய்து செழுஞாந -

நந்தா வமிர்தான தன்னைஞா நக்கண்டம், திந்தாபா ரென்றருளி யிப்படியே நாம்வாழத் - தந்தானைப் பாடித் தழுதழுத்து நாட்டநீர், சிந்தா வுருகாநஞ் சிந்தை களிகூர - நந்தா மலர்த்தடம்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 19

அன்னையே வேண்டு மகப்போ லடியேங்க - ளுன்னை யிரப்போ முவந்துவந் துள்ளத்தா, னின்னன்பர்க் காளாயா நித்தம் பணிசெயநின் - பொன்னங் கழல்கட் புலன்விட்டுப் போகாதே, மன்ன மகங்களிப்ப வாயார வாழ்த்திடநின் - சின்னங்கள் கேட்பச் செவிசிந்தை தீமெழுகே, யென்ன வுருக வருளுதியே லெம் பெருமா - னின்னம் பிறக்கை யினிதேலோ ரெம்பாவாய். 20

தாரணி வான்முழுதுந் தந்தாய் சரண்போற்றி - பாரணையப் பண்ணுநின் பாதம லர்போற்றி, யோரணுவா மண்டமென வோங்கும் பதம்போற்றி - நேரணுவு மண்டமா நேரியதாந் தாள் போற்றி, காரணத்தின் காரணமாங் கண்ணே கழல்போற்றி - யாரணத்தின் மெய்ப்பொருளா மாதி யடிபோற்றி, பூரணபோ தச்சொருபா போற்றியடி போற்றியென் - றோரணவு மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய். 21

இரண்டாந் திருவெம்பாவை முற்றிற்று.

---

## ஆண்டாள் பாடிய திருப் பாவை.

---

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால் - நீராடப் போதுவீர்! போதுமினோ நேரிழையீர், சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் - கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன்குமரன், ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம் -



கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான், நாரா யணனே நமக்கே பறைதருவான் - பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய். 1

வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்கு - செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள், பையத் துயின்ற பரமன் அடிபாடி - நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி, மையிட் டெழுதோம் மலரிட்டு நாம்முடியோம் - செய்யா தனசெய் யோம் தீக்குறளை சென்றோதோம், ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி - உய்யுமா றெண்ணி உகந்தேலோ ரெம்பாவாய். 2

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி - நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால், தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரி பெய்(து) - ஓங்கு பெருஞ்செந்நெ லூடுகயல் உகளப், பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத் - தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி, வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள் - நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய். 3

ஆழி மழைக்கண்ணா! ஒன்றும்நீ கைகரவேல் - ஆழியுள் புக்கு முகந்துகொ(டு) ஆர்த்தேறி, ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்துப் - பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில், ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து - தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல், வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும் - மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். 4

மாயனை மன்னு வடமதுரை மைந்தனை - தூயபெருநீர் யமுனைத் துறைவனை, ஆயர்கு லத்தினில் தோன்றும் அணி விளக்கை - தாயைக் குடல்விளக்கம் செய்ததா மோதரனை, தூயோமாய் வந்துநாம் தூமலர்தூ வித்தொழுது - வாயினால்

பாடி மநத்தினால் சிந்திக்க - போய பிழையும் புகுதருவான் நின்றனவும் - தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய். 5

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில் - வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ, பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலைநஞ் சுண்டு - கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி, வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை - உள்ளத்துக் கொண்டு முநிவர்களும் யோகிகளும், மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம் - உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய். 6

கீசுகீ சென்றெங்கும் ஆனைச்சாத் தம்கலந்து - பேசின பேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே, காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து - வாசந றுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால், ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ? - நாயகப் பெண் பிள்ளாய்! நாரா யணன்மூர்த்தி, கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ - தேச முடையாய் திறவேலோ ரெம்பாவாய். 7

கீழ்வானம் வெள்ளென்(று) எருமை சிறுவீடு - மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும், போவான்போ கின்றாரைப் போகாமல் காத்(து) உன்னைக் - கூவுவான் வந்துநின்றோம் கோது கலமுடைய, பாவாய்! எழுந்திராய் பாடிப் பறைகொண்டு - மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய, தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால் - ஆவவென் றாராய்ந் தருளேலோ ரெம்பாவாய். 8

தூமணி மாடத்துச் சுற்றும்வி ளக்கெரியத் - தூபங் கமழத் துயிலணைமேல் கண்வளரும், மாமான் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய் - மாமீர்! அவளை எழுப்பீரோ? உம்மகள்தான், ஊமையோ? அன்றிச்செ விடோ? அநந்தலோ? - எமப்பெ



ருந்துயில் மந்திரப் பட்டாளோ?, மாமாயன் மாதவன் வைகுந்தன் என்றென்று - நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய். 9

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய் - மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார், நாற்றத் துழாய்முடி நாரா யணன்நம்மால் - போற்றப் பறைதரும் புண்ணியனால் பண்டொரு நாள், கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பக ரணனும் - தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ, ஆற்ற அநந்தல் உடையாய் அருங்கலமே - தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய். 10

கற்றுக்க றவைக்க ணங்கள்ப லகறந்து - செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும், குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே - புற்றா வல்குல் புனமயிலே போதராய், சுற்றத்துத் தோழிமார் எல்லாரும் வந்துநின் - முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச், சிற்றாதே பேசாதே செல்வப்பெண் டாட்டிநீ - எற்றுக்கு றங்கும்பொ ருளேலோ ரெம்பாவாய். 11

கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி - நினைத்து முலைவழியே நின்றுபால் சோர, நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய் - பனித்தலை வீழநின் வாசற் கடைபற்றிச், சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற - மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய், இனித்தான் எழுந்திராய் ஈதென்ன பேருறக்கம் - அனைத்தில்லத் தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய். 12

புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக் - கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்ப், பிள்ளைகள் எல்லாரும் பாவைக்க ளம்புக்கார் - வெள்ளி எழுந்து வியாழன் உறங்கிற்று,

புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய் - குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே, பள்ளிக் கிடத்தியோ பாவாய்நீ நன்னாளால் - கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய். 13

உங்கள்பு ழக்கடைத் தோட்டத்து வாவியுள் - செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பினகாண், செங்கல்பொ டிக்கூறை வெண்பல் தவத்தவர் - தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார், எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும் - நங்காய் எழுந்திராய் நாணாதாய் நாவுடையாய், சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன் - பங்கையக் கண்ணானைப் பாடேலோ ரெம்பாவாய். 14

எல்லே இளங்கிளியே இன்னம் உறங்குதியோ - சில்லென் றழையேன்மின் நங்கைமீர் போதர்கின்றேன், வல்லைஉன் கட்டுரைகள் பண்டேஉன் வாயறிதும் - வல்லீர்கள் நீங்களே நானேதான் ஆயிடுக, ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடைய - எல்லாரும் போந்தாரோ போந்தார்போந் தெண்ணிக்கொள், வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க - வல்லானை மாயனைப் பாடேலோ ரெம்பாவாய். 15

நாயகனாய் நின்ற நந்தகோ பனுடைய - கோயில்காப் பானே கொடித்தோன்றும் தோரண, வாயில்காப் பானே மணிக்கதவம் தாள்திறவாய் - ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை, மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான் - தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான், வாயால்முன் னமுன்னம் மாற்றாதே அம்மாநீ - நேச நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய். 16

அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும் - எம்பெருமான் நந்தகோ பாலா எழுந்திராய், கொம்பனார்க் கெல்லாம்



கொழுந்தே குலவிளக்கே - எம்பெரு மாட்டி யசோதாய் அறிவுறாய், அம்பரம் ஊடறுத் தோங்கி உலகலந்த - உம்பர்கோ மானே உறங்காது எழுந்திராய், செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா - உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய். 17

உந்தும தகளிற்றன் ஓடாத தோள்வலியன் - நந்தகோ பாலன் மருமகளே நப்பின்னாய், கந்தம் கமழும் குழலீ கடைதிறவாய் - வந்தெங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப், பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண் - பந்தார் விரலிஉன் மைத்துனன் பேர்பாடச், செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப - வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். 18

குத்துவி ளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல் - மெத்தென்ற பஞ்ச சயநத்தின் மேலேறிக், கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல் - வைத்துக் கிடந்த பலர்மார்பா வாய்திறவாய், மைத்தடங் கண்ணினாய் நீஉன் மணாளனை - எத்தனை போதும் துயிலெழ ஒட்டாய்காண், எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால் - தத்துவம் அன்று தகவேலோ ரெம்பாவாய். 19

முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று - கப்பம் தவிர்க்கும் கலியே! துயிலெழாய், செப்பம் உடையாய்! திறலுடையாய்! செற்றார்க்கு - வெப்பம் கொடுக்கும் விமலா! துயிலெழாய், செப்பன்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல் - நப்பின்னை நங்காய்! திருவே! துயிலெழாய்!, உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை - இப்போதே எம்மைநீ ராட்டேலோ ரெம்பாவாய். 20

ஏற்றக லங்கள் எதிர்பொங்கு மீதளிப்ப - மாற்றாதே பால் சொரியும் வள்ளற் பெரும்பசுக்கள், ஆற்றப்ப டைத்தான் மகனே

அறிவுறாய் - ஊற்றம் உடையாய்! பெரியாய்! உலகினில், தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்! - மாற்றார் உனக்கு வலிதொலைந்துன் வாசற்கண், ஆற்றாது வந்துன் அடிபணியு மாபோலே - போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய்.21

அங்கண்மா ஞாலத் தரசர் அபிமாந - பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே, சங்கம் இருப்பார்போல் வந்துதலைப்பெய் தோம் - கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போல, செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ - திங்களும் ஆதித் தியனும் எழுந்தாற்போல், அங்கண் இரண்டுங்கொண் டெங்கள்மேல் நோக்குதியேல் - எங்கள்மேல் சாபம் இழிந்தேலோ ரெம்பா வாய்.
22

மாரிம லைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும் - சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து, வேரிம யிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி - மூரிநி மிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப், போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணாஉன் - கோயில்நின் றிங்ஙனே போந் தருளிக் கோப்புடைய, சீரிய சிங்கா சநத்திருந்து யாம்வந்த - காரியம் ஆராய்ந் தருளேலோ ரெம்பாவாய்.
23

அன்றிவ்வு லகம்அ ளந்தாய்! அடிபோற்றி - சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்பேற்றி, பொன்றச்ச கடம் உ தைத்தாய்! புகழ்போற்றி - கன்றுகு ணிலாஎ றிந்தாய்! கழல்போற்றி, குன்று குடையா எடுத்தாய்! குணம்போற்றி - வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி, என்றென்றுன் சேவகமே எத்திப் பறைகொள்வான் - இன்றுயாம் வந்தோம் இரங்கேலோ ரெம்பாவாய்.
24

ஒருத்திமக னாய்ப்பி றந்(து) ஓரிரவில் - ஒருத்திமக னாய் ஒளித்து வளரத், தரிக்கிலா னாகித்தான் தீங்கு நினைந்த -



கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில், நெருப்பென்ன நின்ற நெடுமாலே உன்னை - அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில், திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி - வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். 25

மாலே!ம ணிவண்ணா! மார்கழிநீ ராடுவான் - மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல், ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன - பாலன்ன வண்ணத்துன் பாஞ்சசந் நியமே, போல்வன சங்கங்கள் போய்ப்பா டுடையனவே - சாலப்பெ ரும் பறையே பல்லாண் டிசைப்பாரே, கோலவி ளக்கே கொடியே விதாநமே - ஆலின் இலையாய் அருளேலோ ரெம்பாவாய். 26

கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா உன்தன்னைப் - பாடிப் ப றைகொண்டு யாம்பெறு சம்மாநம், நாடு புகழும் பரிசினால் நன்றாக - சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே, பாடகமே என்றனைய பல்கலனும் யாம்அணிவோம் - ஆடை உடுப்போம் அதன்பின்னே பாற்சோறு, மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக் - கூடியி ருந்துகு ளிர்ந்தேலோ ரெம்பா வாய்.
27

கறவைகள் பின்சென்று கானம்சேர்ந் துண்போம் - அறி வொன்றும் இல்லாத ஆய்க்குலத்(து)உன் தன்னைப், பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம் - குறைவொன்றும் இல்லாத கோவிந்தா உன்தன்னோ(டு), உறவேல் நமக்கிங் கொழிக்க ஒழியாது - அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச், சிறுபேர் அழைத்தனவும் சீறி அருளாதே - இறைவாநீ தாராய் பறையேலோ ரெம்பாவாய். 28

சிற்றஞ்சி றுகாலே வந்துன்னைச் சேவித்துன் - பொற்றாம ரையடியே போற்றும்பொ ருள்கேளாய், பெற்றம்மேய்த் துண்ணும்

குலத்தில் பிறந்தநீ - குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது, இற்றைப்ப றைகொள்வான் அன்றுகாண் கோவிந்த - எற்றைக்கும் ஏழேழ்பி றவிக்கும் உன்தன்னோ(டு), உற்றோமே ஆவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம் - மற்றைநம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய். 29

வங்கக்க டல்கடைந்த மாதவனைக் கேசவனைத் - திங்கள்தி ருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி, அங்கப்ப றை கொண்ட ஆற்றை அணிபுதுவைப் - பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதைசொன்ன, சங்கத்த மிழ்மாலை முப்பதும் தப்பாமே - இங்கிப்ப ரிசுரைப்பார் ஈரிரண்டு மால்வரைத்தோள், செங்கண்தி ருமுகத்துச் செல்வத்தி ருமாலால் - எங்குந்தி ருவருள் பெற்(று) இன்புறுவர் எம்பாவாய். 30

ஆண்டாள் பாடிய திருப் பாவை முற்றிற்று.

---

## தொண்ட ரடிப் பொடி யாழ்வார் அருளிச் செய்த திருப் பள்ளி யெழுச்சி.

ஸ்ரீ ரங்க நாதனை துயி லுணர்த்துதல்.
எண் சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம்.
(பூபாள ராகம் = அட தாளம்)

---

கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான் - கனையிரு ளகன்றது காலையம் பொழுதாய், மதுவிரிந் தொழுகின மாமல ரெல்லாம் - வானவ ரசர்கள் வந்துவந் தீண்டி, எதிர்திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த - இருங்களிற் றீட்டமும் பிடியொடு முரசும், அதிர்தலில் அலைகடல் போன்றுள தெங்கும் - அரங்கத்தம் மாபள்ளி யெழுந்தரு ளாயே. 1



கொழுங்கொடி முல்லையின் கொழுமல ரணவிக் - கூர்ந்தது குணதிசை மாருதம் இதுவோ, எழுந்தன மலரணைப் பள்ளி கொள் ளன்னம் - ஈன்பனி நனைந்தத மிருஞ்சிற குதறி, விழுங்கிய முதலையின் பிலம்புரை பேழ்வாய் - வெள்ளயி றுற அதன் விடத்தினுக் கனுங்கி, அழுங்கிய ஆனையி னருந்துயர் கெடுத்த - அரங்கத்தம் மாபள்ளி யெழுந்தரு ளாயே. 2

சுடரொளி பரந்தன சூழ்திசை யெல்லாம் - துன்னிய தாரகை மின்னொளி சுருங்கி, படரொளி பசுத்தனன் பனிமதி இவனோ - பாயிரு ளகன்றது பைம்பொழிற் கமுகின், மடலிடைக் கீறிவண் பாளைகள் நாற - வைகறை கூர்ந்தது மாருதம் இதுவோ, அடலொளி திகழ்தரு திகிரியந் தடக்கை - அரங்கத்தம் மாபள்ளி யெழுந்தரு ளாயே. 3

மேட்டிள மேதிகள் தளைவிடும் ஆயர்கள் - வேய்ங்குழ லோசையும் விடைமணிக் குரலும், ஈட்டிய இசைதிசை பரந்தன வயலுள் - இரிந்தன சுரும்பினம் இலங்கையர் குலத்தை, வாட்டிய வரிசிலை வானவ ரேறே - மாமுனி வேள்வியைக் காத்து,அவ பிரதம், ஆட்டிய அடுதிற லயோத்தியெம் மரசே - அரங்கத்தம் மாபள்ளி யெழுந்தரு ளாயே. 4

புலம்பின புட்களும் பூம்பொழில் களின்வாய் - போயிற்றுக் கங்குல்பு குந்தது புலரி, கலந்தது குணதிசைக் கனைகட லரவம் - களிவண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த, அலங்கலந் தொடையல் கொண் டடியிணை பணிவான் - அமரர்கள் புகுந்தனர் ஆதலில் அம்மா, இலங்கையர் கோன்வழி பாடுசெய் கோயில் - எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 5

இரவியர் மணிநெடுந் தேரொடும் இவரோ - இறையவர் பதினொரு விடையரும் இவரோ, மருவிய மயிலின னறுமுகன்

இவனே - மருதரும் வசுக்களும் வந்துவந் தீண்டி, புரவியோ டாடலும் பாடலும் தேரும் - குமரதண் டம்புகுந் தீண்டிய வெள்ளம், அருவரை யனையநின் கோயில்முன் இவரோ - அரங் கத்தம் மாபள்ளி யெழுந்தரு ளாயே. 6

அந்தரத் தமரர்கள் கூட்டங்கள் இவையோ - அருந்தவ முனிவரும் மருதரும் இவரோ, இந்திர னானையும் தானும்வந் திவனே - எம்பெரு மான்உன் கோயிலின் வாசல், சுந்தரர் நெருக்கவிச் சாதரர் நூக்க - இயக்கரும் மயங்கினர் திருவடித் தொழுவான், அந்தரம் பாரிட மில்லைமற் றிதுவோ - அரங்கத்தம் மாபள்ளி யெழுந்தரு ளாயே. 7

வம்பவிழ் வானவர் வாயுறை வழங்க - மாநிதி கபிலைஒண் கண்ணாடி முதலா, எம்பெரு மான்படி மக்கலங் காண்டற்கு - எற்பன வாயின கொண்டுநன் முனிவர், தும்புரு நாரதர் புகுந்தனர் இவரோ - தோன்றினன் இரவியும் துலங்கொளி பரப்பி, அம்பர தலத்தினின் றுஅகல்கின்ற துஇருள்போய், அரங்கத்தம் மாபள்ளி யெழுந்தரு ளாயே. 8

ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி - யாழ்குழல் முழவமோ டிசைதிசை கெழுமி, கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள் - கந்தரு வரவர் கங்குலு ளெல்லாம், மாதவர் வானவர் சாரணர் இயக்கர் - சித்தரும் மயங்கினர் திருவடித் தொழுவான், ஆதலில் அவர்க்குநா ளோலக்கம் அருள - அரங்கத்தம் மாபள்ளி யெழுந்தரு ளாயே. 9

கடிமலர் கமலங்கள் மலர்ந்தன இவையோ - கதிரவன் கனைகடல் முளைத்தனன் இவனே, துடியிடை யார்சுரி குழல்பிழிந் துதறித் - துகிலுடுத் தேறினர் சூழ்புன லரங்கா, தொடையொத்த



துளவமும் கூடையும் பொலிந்து - தோன்றிய தோள்தொண்ட ரடிப்பொடி யென்னும், அடியனை அளியனென் றருளிஉன் னடியார்க்கு - ஆட்படுத் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே. 10

தொண்ட ரடிப் பொடி யாழ்வார் அருளிச் செய்த
திருப் பள்ளி யெழுச்சி முற்றிற்று.

---

## மாணிக்க வாசக சுவாமிகள் அருளிச் செய்த திரு வெம் பாவை.

வெண் டளையான் வந்த இயற் றர விணைக் கொச்சகக் கலிப்பா.

திருச் சிற்றம்பலம்.

---

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் - சோதியை யாம் பாடக் கேட்டேயும் வாட்டடங்கண், மாதே வளருதியோ வன் செவியோ நின்செவிதான் - மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய், வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம் மறந்து - போதா ரமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன், ஏதேனும் ஆகாள் கிடந்தா ளென்னே யென்னே - யீதேயெந் தோழி பரிசேலோர் எம்பாவாய். 1

பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப்பகல்நாம் - பேசும்போ தெப்போதிப் போதா ரமளிக்கே, நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர் - சீசி யிவையுஞ் சிலவோ விளையாடி, யேசும் இடமீதோ விண்ணோர்கள் ஏத்துதற்குக் - கூசும் மலர்ப் பாதந் தந்தருள வந்தருளுந், தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள் - ஈசனார்க் கன்பார்யாம் ஆரேலோ ரெம்பாவாய். 2

முத்தன்ன வெண்ணகையாய் முன்வந் தெதிரெழுந்தென் - அத்தன் ஆனந்தன் அமுதனென் றள்ளூறித், தித்திக்கப் பேசுவாய்

வந்துன் கடைதிறவாய் - பத்துடையீர் ஈசன் பழவடியீர் பாங்குடையீர், புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ - எத்தோநின் அன்புடைமை எல்லோம் அறியோமோ, சித்தம் அழகியார் பாடாரோ நஞ்சிவனை - இத்தனையும் வேண்டும் எமக்கேலோ ரெம்பாவாய். 3

ஒண்ணித் திலநகையாய் இன்னம் புலர்ந்தின்றோ - வண்ணக் கிளிமொழியா ரெல்லாரும் வந்தாரோ, எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோம் அவ்வளவும் - கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே, விண்ணுக் கொருமருந்தை வேதவி ழுப்பொருளைக் - கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம், உண்ணெக்கு நின்றுருக யாமாட்டோம் நீயேவந் - தெண்ணிக் குறையில் துயிலேலேலோ ரெம்பாவாய். 4

மாலறியா நான்முகனுங் காணா மலையினைநாம் - போலறிவோ மென்றுள்ள பொக்கங்க ளேபேசும், பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய் - ஞாலமே விண்ணே பிறவே யறிவரியான், கோலமும் நம்மையாட் கொண்டருளிக் கோதாட்டுஞ் - சீலமும் பாடிச் சிவனே சிவனேயென், றோல மிடினும் உணரா யுணராய் காண் - ஏலக் குழலி பரிசேலோ ரெம்பாவாய். 5

மானேநீ நென்னலை நாளைவந் துங்களை - நானேயெ ழுப்புவன் என்றலுமே நாணாமே, போனதி சைபகராய் இன்னம்பு லர்ந் தின்றோ - வானே நிலனே பிறவே யறிவரியான், தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும் - வான்வார் கழல் பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய், ஊனே யுருகாய் உனக்கே யுறுமெமக்கும் - ஏனோர்க்குந் தங்கோனைப் பாடேலோ ரெம்பாவாய். 6

அன்னே இவையுஞ் சிலவோ பலவமரர் - உன்னற் கரியான் ஒருவன்இருஞ் சீரான், சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்



திறப்பாய் - தென்னாவென் னாமுன்னந் தீசேர் மெழுகொப்பாய், என்னானை யென்னரையன் இன்னமுதென் றெல்லோமுஞ் - சொன்னோங்கேள் வெவ்வேறா யின்னந்து யிலுதியோ, வன்னெஞ்சப் பேதையர்போல் வாளாகி டத்தியால் - என்னே துயிலின் பரிசேலோ ரெம்பாவாய். 7

கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும் - ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்கெங்கும், கேழில் பரஞ்சோதி கேழில் பரங் கருணை - கேழில் விழுப்பொருள்கள் பாடினோங் கேட்டிலையோ, வாழியீ தென்ன வுறக்கமோ வாய்திறவாய் - ஆழியான் அன்புடைமை யாமாறும் இவ்வாறோ, ஊழி முதல்வனாய் நின்ற வொருவனை - யேழைபங் காளனையே பாடேலோ ரெம்பாவாய். 8

முன்னைப்ப ழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே - பின்னைப்பு துமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே, உன்னைப்பி ரானாகப் பெற்றவுன் சீரடியோம் - உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம், அன்னவரே யெங்கணவ ராவார் அவருகந்து - சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம், இன்ன வகையே யெமக்கெங்கோன் நல்குதியேல் - என்ன குறையும் இலோமேலோ ரெம்பாவாய். 9

பாதாளம் எழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர் - போதார் புனைமுடியும் எல்லாப் பொருண்முடிவே, பேதை யொருபாற் றிருமேனி யொன்றல்லன் - வேதமுதல் விண்ணோரும் மண்ணுந் துதித்தாலும், ஓத வுலவா ஒருதோழன் தொண்டருளன் - கோதில் குலத்தரன்றன் கோயிற்பி ணாப்பிள்ளைகாள், ஏதவனூர் ஏதவன் பேர் ஆருற்றார் ஆரயலார் - ஏதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய். 10

மொய்யார் தடம்பொய்கை புக்குமுகே ரென்னக் - கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி, ஐயா வழியடியோம் வாழ்ந்

தோங்காண் ஆரழல்போற் - செய்யாவெண் ணீறாடி செல்வா சிறுமருங்குன், மையார் தடங்கண் மடந்தை மணவாளா - ஐயாநீ யாட்கொண் டருளும் விளையாட்டின், உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம் - எய்யாமற் காப்பா யெமை யேலோ ரெம்பாவாய். 11

ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடுந் - தீர்த்தனற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடுங், கூத்தனிவ் வானுங் குவலயமும் எல்லோமுங் - காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி, வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள் - ஆர்ப்பரவஞ் செய்ய அணிகுழன்மேல் வண்டார்ப்பப், பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாதம் - ஏத்தி யிருஞ்சுனைநீர் ஆடேலோ ரெம்பாவாய். 12

பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால் - அங்கங்கு ருகினத்தாற் பின்னும் அரவத்தால், தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினால் - எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த, பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநஞ் - சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக், கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப் - பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 13

காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக் - கோதை குழலாட வண்டின் குழாமாடச், சீதப் புனலாடிச் சிற்றம் பலம் பாடி - வேதப் பொருள்பாடி யப்பொருளா மாபாடிச், சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி - ஆதி திறம்பாடி யந்தமா மாபாடிப், பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன் - பாதத்தி றம்பாடி யாடேலோ ரெம்பாவாய். 14

ஓரொருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான் - சீரொருகால் வாயோவாள் சித்தங்க ளிகூர, நீரொருகால் ஓவா



நெடுந்தாரை கண்பனிப்பப் - பாரொருகால் வந்தனையாள் விண் ணோரைத் தான்பணியாள், பேரரையற் கிங்ஙனே பித்தொருவ ராமாறும் - ஆரொருவ ரிவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர் தாள், வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி - யேருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 15

முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள் - என்னத் திகழ்ந்தெம்மை யாளுடையா ளிட்டிடையின், மின்னிப்பொ லிந்தெம்பி ராட்டிதி ருவடிமேற் - பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம், என்னச்சி லைகுலவி நந்தம்மை யாளுடையாள் - தன்னிற் பிரிவிலா வெங்கோமான் அன்பர்க்கு, முன்னி யவணமக்கு முன்சுரக்கும் இன்னருளே - யென்னப்பொ ழியாய்ம ழையேலோ ரெம்பாவாய். 16

செங்கண வன்பாற் றிசைமுகன்பாற் றேவர்கள்பால் - எங்குமி லாததோ ரின்பம்நம் பாலதாக், கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி - இங்குநம் மில்லங்க டோறுமெ ழுந் தருளிச், செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை - அங்க ணரசை யடியோங்கட் காரமுதை, நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப் - பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பா வாய். 17

அண்ணா மலையா னடிக்கமலஞ் சென்றிறைஞ்சும் - விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போற், கண்ணா ரிரவி கதிர் வந்து கார்கரப்பத் - தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாம கலப், பெண்ணாகி யாணா யலியாய்ப் பிறங்கொளிசேர் - விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக், கண்ணா ரமுதமுமாய் நின்றான் கழல்பாடிப் - பெண்ணேயிப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 18

உங்கையிற் பிள்ளை யுனக்கே அடைக்கலமென் - றங்கப்ப
ழஞ்சொற்பு துக்குமெம் அச்சத்தால், எங்கள் பெருமான்
உனக்கொன் றுரைப்போங்கேள் - எங்கொங்கை நின்னன்ப ரல்லார்
தோள் சேரற்க, எங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க -
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க, இங்கிப்ப ரிசே
யெ மக்கெங்கோன் நல்குதியேல் - எங்கெழிலென் ஞாயி றெமக்
கேலோ ரெம்பாவாய். 19

போற்றி யருளுகநின் ஆதியாம் பாதமலர் - போற்றி யருளுக
நின் அந்தமாஞ் செந்தளிர்கள், போற்றியெல் லாவுயிர்க்கும்
தோற்றமாம் பொற்பாதம் - போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம்
பூங்கழல்கள், போற்றியெல் லாவுயிர்க்கும் ஈறும் இணையடிகள் -
போற்றிமால் நான்முகனுங் காணாத புண்டரிகம், போற்றியா
முய்யவாட் கொண்டருளும் பொன்மலர்கள் - போற்றியா
மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய். 20

**மாணிக்க வாசக சுவாமிகள் பாடிய திரு வெம் பாவை முற்றிற்று.**

---

## மாணிக்க வாசக சுவாமிகள்

## திருப் பெருந் துறையில் அருளிய திருப் பள்ளி யெழுச்சி.

திருச் சிற்றம்பலம், திரோதாந சுத்தி.

எண் சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம்.

---

போற்றியென் வாழ்முத லாகிய பொருளே - புலர்ந்தது
பூங்கழற் கிணைதுணை மலர்கொண், டேற்றிநின் திருமுகத்
தெமக்கருள் மலரும் - எழினகை கொண்டுநின் திருவடி தொழு
கோஞ், சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ் - திருப்
பெருந் துறையுறை சிவபெரு மானே, எற்றுயர் கொடியுடை
யாயெனை யுடையாய் - எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 1



அருணனிந் திரன்றிசை யணுகின னிருள்போய் - அகன்றது
வுதயநின் மலர்த்திரு முகத்தின், கருணையின் சூரிய னெழவெழ
நயனக் - கடிமலர் மலரமற் றண்ணலங் கண்ணாம், திரணிரை
யறுபத முரல்வன இவையோர் - திருப்பெருந் துறையுறை
சிவபெரு மானே, அருணிதி தரவரு மானந்த மலையே - அலைகட
லேபள்ளி யெழுந்தரு ளாயே. 2

கூவின பூங்குயில் கூவின கோழி - குருகுக ளியம்பின
வியம்பின சங்கம், ஓவின தாரகை யொளியொளி யுதயத் -
தொருப்படு கின்றது விருப்பொடு நமக்குத், தேவநற் செறிகழற்
றாளிணை காட்டாய் - திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே,
யாவரு மறிவரி யாயெமக் கெளியாய் - எம்பெரு மான்பள்ளி
யெழுந்தரு ளாயே. 3

இன்னிசை வீணைய ரியாழின ரொருபால் - இருக்கொடு
தோத்திர மியம்பின ரொருபால், துன்னிய பிணைமலர்க் கையின
ரொருபால் - தொழுகைய ரழுகையர் துவள்கைய ரொருபால்,
சென்னியி லஞ்சலி கூப்பின ரொருபால் - திருப்பெருந் துறையுறை
சிவபெரு மானே, என்னையு மாண்டுகொண் டின்னருள் புரியும் -
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 4

பூதங்கள் தோறுநின் றாயெனி னல்லாற் - போக்கிலன்
வரவில னெனநினைப் புலவோர், கீதங்கள் பாடுத லாடுத லல்லாற் -
கேட்டறி யோமுனைக் கண்டறி வாரைச், சீதங்கொள் வயற்றிருப்
பெருந்துறை மன்னா - சிந்தனைக் கும்மரி யாயெங்கள் முன்வந்,
தேதங்க ளறுத்தெம்மை யாண்டருள் புரியும் - எம்பெரு மான்பள்ளி
யெழுந்தரு ளாயே. 5

பப்பற வீட்டிருந் துணருநின் னடியார் - பந்தனை வந்தறுத்
தாரவர் பலரும், மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின் -
வணங்குகின் றாரணங் கின்மண வாளா, செப்புறு கமலங்கள்
மலருந்தண் வயல்சூழ் - திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே,

இப்பிறப் பறுத்தெமை யாண்டருள் புரியும் - எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 6

அதுபழச் சுவையென அமுதென அறிதற் - கரிதென எளிதென அமரு மறியார், இதுவவன் றிருவுரு இவனவ னெனவே - யெங்களை யாண்டுகொண் டிங்கெழுந் தருளும், மதுவளர் பொழிற்றிரு வுத்தர கோச - மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா, எதுவெமைப் பணிகொளு மாறது கேட்போம் - எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 7

முந்திய முதல்நடு இறுதியு மானாய் - மூவரு மறிகிலரியாவர்மற் றறிவார், பந்தணை விரலியு நீயுநின் னடியார் - பழங்குடில் தொறுமெழுந் தருளிய பரனே, செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித் - திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி, அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டாய் - ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. 8

விண்ணகத் தேவரு நண்ணவு மாட்டா - விழுப்பொருளேயுன தொழுப்படி யோங்கள், மண்ணகத் தேவந்து வாழச் செய் தானே - வண்திருப் பெருந்துறை யாய்வழி யடியோம், கண்ணகத் தேநின்று களிதரு தேனே - கடலமு தேகரும் பேவிரும் படியார், எண்ணகத் தாயுல குக்குயி ரானாய் - எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 9

புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம் - போக்குகின் றோமவ மேயிந்தப் பூமி, சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித் - திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம், அவன் விருப் பெய்தவு மலரவ னாசைப் - படவுநின் னலர்ந்தமெய்க் கருணையு நீயும், அவனியிற் புகுந்தெமை யாட்கொள்ள வல்லாய் - ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. 10

மாணிக்க வாசக சுவாமிகள் பாடிய திருப் பள்ளி யெழுச்சி முற்றிற்று.

---

| | | |
|---|---|---|
| 16. | மஹா ராஜத் துறவு - மகப் பிரசாதிநி உரை. | ரூ. 2—0 |
| 17. | வைராக்ய தீபம் - பத வுரை - பொழிப் புரை. | 0—8 |
| 18. | பக்தி (வைராக்ய) சதகம் - பத வுரை - பொழிப் புரை. | 1—8 |
| 19. | சிடாசாரம் - பால போதிநி உரை. | 0—8 |
| 20. | திருக் களர் வீர சேகர ஞாந தேசிகர் சரிதம் - வசநம். | 1—0 |
| 21. | தாந்திரீக த்வைத சைவ கண்டநம் - வசநம். (சூட்டுக் கோல் கட்டாரி புச்சம்) | 1—0 |
| 22. | வட நாட்டில் ஹரித்துவாரக் கும்ப மேளாவும், தென் னாட்டில் சாதுக்கள் மேளாவும் - வசநம். | 0—2 |
| 23. | அத்வைதிகட்கும், அதிஷ்டாநத்தி லிருப்பவர்கட்கும் ஓர் அறிக்கை. | 0—2 |
| 24. | சாது சங்க நிறுவல் விழாக் கூட்ட வைபவம் - வசநம். | 0—2 |
| 25. | மடங்களின் உற்பத்தியும், தற் போது உள்ள நிலைமையும் - வசநம். | 0—2 |
| 26. | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி (கவி 1135). | 3—0 |
| 27. | கீதாத் திரயம் (பகவற் கீதை கவி 545. ஈஸ்வர கீதை கவி 338. பிரஹ்ம கீதை கவி 547) ஆக (1430 கவி) மூன்று சேர்ந்தது. | 3—0 |
| 28. | விவேக சூடாமணி (கவி 671), அஞ்ஞ வதைப் பரணி (கவி 494). | 1—0 |
| 29. | பஞ்ச தசி (கவி 804). | 0-10 |
| 30. | வாசிட்டம் (கவி 2055). | 2—4 |
| 31. | கைவல்ய நவநீதம் (கவி 288). | 0—9 |
| 32. | ஸ்தோத்திர ரசமஞ்சரி (கவி 160). | 0—4 |



**இராம நாத புரம் ஜில்லா, திருப் பூ வணம், வேதாந்த மடம்,**
**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றியன — பதிப்பித்தன.**

| | | |
|---|---|---|
| 1. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா - வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு. | ரூ. 2—8 |
| 2. | விசார சாகரம் - வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு. | 2—4 |
| 3. | வியாச தாத்பர்ய நிர்ணயம் - வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—8 |
| 4. | வேதாந்த சித்தாந்த முக்தாவலி - வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—8 |
| 5. | நைஷ்க் கர்ம்ய சித்தி - வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—8 |
| 6. | வேதாந்த பரிபாஷை - வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—7 |
| 7. | ஹரி மீடே-ஹரி தத்வ முக்தாவலி - சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0-12 |
| 8. | ஸ்வாராஜ்ய சித்தி - வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—4 |
| 9. | மண்டல பிராஹ்மண உபநிஷத்-ராஜ யோக பாஷ்யம் - சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—4 |
| 10. | ஈசாவாஸ்ய உபநிஷத்-சங்கர பாஷ்யம் - சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—4 |
| 11. | வேதாந்த சஞ்ஞா - வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—2 |
| 12. | மூர்க்க சதகம் - சம்ஸ்கிருத - பத வுரை. பகவற் கீதை 15-வது அத்தியாயம் சம்ஸ்கிருத பத வுரை. தமிழ்க் கவி உரை. நிர்க்குண அஷ்டோத்தர சதநாமாவளி தமிழ் சம்ஸ்கிருதம். | 0—8 |
| 13. | கதா சரித் சாகரம் - வசநம் கதை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 2—4 |
| 14. | நாநா ஜீவ வாதக் கட்டளை - சத்யார்த்தப் பிரகாசிகை உரை. | 2—0 |
| 15. | கீதா சாரத் தாலாட்டு - லகு சந்திரிகை உரை. | 2—0 |